

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

பரஞ்சோதிமுனிவர்

அருளிச்செய்த

# வேதாரணியபுராணம்.

---

வலையமாநகரம்

**வயி. வ. இராமநாதச்செட்டியாரவர்கள்**

வேண்டுகோளின்படி

வேதாரணியம் பிரதோஷமடாதிபர்

**மா. சோமாஸ்கந்தபட்டாரகர்**

அவர்களால்

பரிசோதித்து




சென்னை

தாம்ஸன் கம்பெனி அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

இரண்டாம்பதிப்பு.

குரோதிஞு மிதுனரவி 1904

இதன்விலை ருபா ஒன்று.

முன்புநர சிங்கவடன் மோதிவரு நாளீ
சன்பதுமன் மாலமரர் தாபதர்கள் யாரு
மன்புகொடவ் வேதவன மீதினில மர்ந்தா
ரென்பதுகொ டும்பர்வள நாடெனவி சைப்பார். (கக)

வேறு.

சத்திய கிரியென் றேதுந் தன்மையான் மோடி சார்வாற்
கொத்தலர் மறைவ னத்தாற் குறுமுனி பின்முன் வந்த
வித்தக முள்ளி யாற்றால் விரிகட லடுத்த வாற்று
லத்திரு நாடு கூறி லைந்திணை யுடைய தாமால். (கஉ)

அருவியி னொலியும் வேழத் தரும்பெரு முழக்குங் காவன்
மருவிய புனங்க டோறும் வகுத்தகம் பலையுங் கோலத்
தெரிவயர் குறிஞ்சி யாழிற் சேர்த்தவின் னிசையுங் கூடி
யிரவொடு பகலென் றில்லா விருங்கட லோசை யேய்க்கும். (கந)

வேறு.

மஞ்சு ருழிதண் வைகிவண் டார்புனத்
தஞ்சு கங்கடி மாத ரணிபல
பஞ்சின் மெல்லடி யென்றும் படியுரு
விஞ்சை மாதர்க டோற்றம் விளக்குமால். (கச)

கால மெண்ணு வரசர் கரங்கொள்செங்
கோலை மாறிக் குடியை யலைப்பன
போல வெற்பின் புனந்தொறு மைவனச்
சாவி முற்று முழக்குவ த்ந்திகள். (கரு)

கேழ னின்றங் குழவயற் கேசரி
வேழ முத்தம் விதைத்திட மென்மலர்ச்
சூழ றேனீர் சொரிவன கண்டயல்
வாழு மந்தி மணிவரம் பேற்றுமால். (கசு)

### வேறு.

மலைய தன்புற மெங்குமா தங்கமே மாதரங் கங்க ளெங்குமா தங்கமே, குலைகொள் வெட்சி யலர்பொற் குழைகளே கோதி லாடைக ளும்பொற் குழைகளே, முலைபரிப்பதும் வெற்பரின் முத்தமே முகம்ப ரிப்பதும் வெற்பரின் முத்தமே, நிலைகளெங்கு நிகழ்த்திற் குறிஞ்சியே நின்றயாழு நிகழ்த்திற் குறிஞ்சியே. (கஎ)

கான மெங்கணும் வேங்கையந் தாமமே கன்னி யர்க்கணி வேங்கையந் தாமமே, சோனை மாரி தருங்கந் தரங்களே சுரத வாரி தருங்கந் தரங்களே, யான வண்டின நின்றுகாந் தாரமே யாற்றுமோசை யதிர் வகாந் தாரமே, பான லந்தண் ணருவித் தடங்களே பார்க்கி லெங்கு மருவித் தடங்களே. (க அ)

### வேறு.

மற்றொரு மருங்கினில் வயங்கு பாலைவி
லுற்றர னிரும்புய முகந்த மோடியாங்
கொற்றவை காவல்கைக் கொண்ட சூலமீ
தெற்றிய சுடர்வெயி லெறிக்கு மெங்கணும். (கக)

சிரம்புகு மத்தமு மெருக்குஞ் செய்யமான்
கரங்கொடு வருமறைக் கான வேடவர்
நெருங்கியங் கணைபவர் நீள்ப வப்பொரு
ளொருங்குறக் கவர்ந்துமே லோட வைப்பரால். (உ0)

பாதக வனமழல் பற்றி நீறெழ
மேதகு மறத்தினை வெய்ய கூளியும்
பூதமுங் கணங்களும் பொருவி லாயம
தூதரு முருவகை துரந்து நிற்குமால். (உக)